போய கருடன் அன்னம் முதலியவைகளையுந் தேவ
ருலகங்களையும் முருகக்கடவுளின் வாக்குவன்மையானது
முன்னம் போனிலைபெற்று விளங்கச்செய்தது. நவின்ற
நால்வரும் பூதராகுமுன்னம் புரிந்த தவத்தைக்கெடுத்த
குற்றத்தையும், பூதர்களின் வசனம்பிடித்து அவர்க
ளொடுகூடித் தேவர் வாகனாதிகளைக் கொல்லுமாறு
கேடிழைத்த குற்றத்தையும் அஞ்ஞான்று குகப்பிரமத்
திற்கு ஊர்தியுங் கொடியுமாயிருந்த மயிலுங் கோழியும்
மனத்திடை ஆலோசித்து இனி யிது செய்யத்தக்க
தெனக் காஞ்சிப்பதியிற் குகபிரானைத் தியானித்துத்
தவங்கிடந்து அப்பிரானுணையின்படி அவனது சாயுச்சிய
பதவி யடைந்தன. குகேசனாற் கொல்லப்பட்ட சிங்கன்
தாரகனெனும் பெயரிய இருவருங் கற்பாந்தத்திற்
காளிக்கும் மகாசாத்தாவுக்கும் வாகனங்களாதற்குக்
கைலாயத்திற் பூதவடிவாயிருக்கின்றனர். மயிலுங்கோழி
யுஞ் சாயுச்சியமடைந்த பின்னர்ச் சுவாமி, அவ்விரண்டு
மில்லாதிருந்தனனோ? என்னின்,—சூரசங்காரம் முடித்
துச் சூரனையும் பதுமனையும் வாகனமுங் கொடியுமாகக்
கொள்ளும் முன்னரேயே வீரமாகேந்திரத்திற் சிறைப்பட்
டிருந்த சயந்தன் முதலிய தேவர்கட்குக் கனவிற் றரிசன
மான ஞான்று "மிகப்பெரிதான மயில்வாகனத்தின்
மிசை வீற்றிருந்தவனுமாய்" என வீரமாகேந்திரகாண்டத்
தின் ங-ம் அத்தியாயத்து ஞ, சு-ம் சுலோகங்களில்
வெளியாமாறு இரகசியமான மயில்வாகனத்தை யுடை
யவனாயிருந்தவாறுபோல அஞ்ஞான்றும் அத்தகைய
மயில்வாகனத்தையுங் கோழிக்கொடியையு முடையவனா
யிருந்தவனவன் என்றேனும் அப்பதவிபெற்ற வேறு
மயிலையுங் கோழியையுங் கொண்டிருந்தவனவனென்றே
னுங் கோடலில் ஆசங்கையொன்றும் இன்றென்க. மேல்
நுவன்றபடி வரம் வாங்கிக்கொண்ட சூரனும் பதுமனும்